சோற்றைச் சுமத்திநீ பந்தித்து வைக்கத்
திருத்திக்குண் மதுவென்னவே
துள்ளித் துடித்தென்ன பேறுபெற் றேனருட்
டோயநீ பாய்ச்சல்செய்து
நாற்றைப் பதித்ததென ஞானமாம் பயிரதனை
நாட்டிப் புலப்பட்டியு
நமனுனை தீப்பூடு மணுகாமன் முன்னின்று
நாடுசிவ போகமான
பேற்றைப் பகுந்தருளி யெனையாள வல்லையோ
பெரியவகி லாண்டகோடி
பெற்றநா யகிபெரிய கயிலைமா நகர்மருவு
பெரியநா யகியம்மையே. 1

## தந்தை தாய்

தந்தைதாய் மகவுமனை வாழ்க்கை யாக்கை
சகமனைத்து மௌனியரு டழைத்த போதே
யிந்திரசா லங்கனவு கானனீரா
யிருந்ததுவே யிவ்வியற்கை யென்னே யென்னே. 1

என்னைநான் கொடுக்கவொருப் பட்ட கால
மியாதிருந்தென் னைவைபோயென்னென்னை நீங்கா
வன்னைபோ லருள்பொழியுங் கருணை வாரி
யானந்தப் பெருமுகிலே யரசே சொல்லாய். 2

அரசேநின் றிருக்கருணை யல்லா தொன்றை
யறியாத சிறியேனு னதனுன் முத்திக்
கரைசேரும் படிக்குனருட் புணையைக் கூட்டுங்
கைப்பிடியே கடைப்பிடியாக் கருத்துட் கண்டேன்.

கண்டேனிங் கென்னையுமென் றனையு நீங்காக்
கருணையுநின் றன்னையுநான் கண்டேன் கண்டேன்
விண்டேனென் றெனைப்புறம்பாத் தள்ளவேண்டாம்
விண்டதுநின் னருட்களிப்பின் வியப்பா லன்றே. 4

ஓவென்ற சுத்தவெளி யொன்றே நின்றிங்
குயிரையெல்லாம் வம்மினென வுவட்டா வின்பத்
தேவென்ற நீகலந்து கலந்து முத்தி
சேர்த்தனையேற் குறைவாமோ செகவி லாசம். 5

செகத்தையெல்லா மணுமளவுஞ் சிதரு வண்ணஞ்
சேர்த்தணுவில் வைப்பையணுத் திரள யெல்லா
மகத்துவமாப் பிரமாண்ட மாகச் செய்யும்
வல்லவா நீநினைந்த வாறே யெல்லாம். 6

சொல்லாலே வாய்துடிப்ப தல்லா, னெஞ்சந்
துடித்திருக ணீரருவி சொரியத் தேம்பிக்
கல்லாலே யிருந்தநெஞ்சுங் கல்லான் முக்கட்
கனியேநெக் குருகிடவுங் காண்பேன் கொல்லோ.7



## பெற்றவட்கே

பெற்றவட்கே தெரியுமந்த வருத்தம் பிள்ளை
 பெருப்பேதை யறிவாளோ பேரா னந்த
முற்றவர்க்கே கண்ணீர்கம் புலையுண் டாகு
 முருதவரே கன்னெஞ்ச முடைய ராவார். 1

ஆவாவென் றழுதுதொழுங் கைய ராகி
 யப்பனே யானந்த வடிக ளேநீ
வாவாவென் றவர்க்கருளுங் கருணை யெந்தாய்
 வன்னெஞ்சர்க் கிரங்குவதெவ் வாறு நீயே. 2

நீயேயிங் கெளியேற்குந் தாக மோக
 னினைவூடே நின்றுணர்த்தி நிகழ்த்த லாலே
பேயேற்குந் தனக்கென்னவோ ரன்பு முண்டோ
 பெம்மானே யின்னமன்பு பெருகப் பாராய். 3

பாராயோ வென்றுயர மெல்லா மையா
 பகருமுன்னே தெரியாதோ பாவி யேன்முன்
வாராயோ வின்னமொரு காலா னலும்
 மலர்க்காலென் சென்னிமிசைவைத்திடாயோ. 4

வைத்திடுங்கா லைப்பிடித்துக் கண்ணின் மார்பில், வைத்தணைத்துக் கொண்டுகையால் வளைத்துக் கட்டிச், சித்தமிசைப் புகவிருத்திப் பிடித்துக் கொண்டு தியக்கமற வின்பசுகஞ் சேர்வதென்றோ.5

சேராமற் சிற்றினத்தைப் பிரித்தெந் நாளுந்
திருவடிப்பே ரினத்துடனே சேராவண்ண
மாராக நாலுந்தே னாசே நீதா
னறிந்திருந்து மாயையிலே னழுந்தவைத்தாய்.

வைத்தபொரு ளுடலாவி மூன்று நின்கை
வசமெனவேயான்கொடுக்கவாங்கிக்கொண்டு
சித்தமிசைப் புகுந்ததுதான் மெய்யோ பொய்யோ
சிறியேற்கின்குவுரையாய்திகையாவண்ணம்.

திகையாதே வெந்நாளும் பேரானந்தத்
தெள்ளமுத முதவாமற் றிவலை காட்டி
வகையாக வலக்கழித்தா யுண்டு டுத்து
வாழ்ந்தேனு னிரண்டுகான் மாடு போலே. 8

மாடுமக்கள் சிற்றிடையார் செம்பொ னுடை
வைத்தகன தனமேடை மாட கூடம்
விடுமென்பாற் றொடர்ச்சியோ விடைவி டாமன்
மிக்ககதி வீடன்றோ விளங்கல் வேண்டும். 9

விளங்கவெனக் குள்ளுள்ளே விளங்கா நின்ற
வேதகமே போதகமே விமல வாழ்வே
களங்கரகி தப்பொருளே யென்னை நீங்காக்
கண்ணுதலே நாதாந்தக் காட்சிப் பேறே. 10

நாதமே நாதாந்த வெளியே சுத்த
ஞா தருவே ஞானமே ஞேய மேகல்

வேதமே வேதமுடி வான மோன
வித்தேயிங் கென்னையினி விட்டிடாதே. 11

# கல்லாலின்

கல்லாலி னீழறனி லொருநால் வர்க்குங்
கடவுணீ யுணர்த்துவதுங் கைகாட் டென்றாற்
சொல்லாலே சொலப்படுமோ சொல்லுந் தன்மை
தரும்புபற்றிக் கடல்கடக்குந் துணிபேயன்றோ.

அன்றேவா மோவெனவுஞ் சமய கோடி
யத்தனையும் வெவ்வேறா யாற்ற நேரே
நின்றாயே நினைப்பெறுமா றெவ்வா றங்கே [டோ.
நின்னருள்கொண் டறிவதல்லா னெறிவேறுண்

நெறிபார்க்கி னின்னையன்றி யகிலம் வேறோ
நிலநீர்தீக் கால்வானு நீய லாத
குறியாது மில்லையென்றால் யாங்கள் வேறோ
கோதையொரு கூறுடையாய் கூறாய் கூறாய்.

கூறாய வைம்பூதச் சுமையைத் தாங்கிக்
குணமிலா மனமெனும்பேய்க் குரங்கின்பின்
மாறாத கவலையுடன் சுழல வென்னை [னே
வைத்தனையே பரமேநின் மகிமை நன்றே. 4

நன்றெனவுந் தீதெனவு மெனக்கிங் குண்டோ
நானுகி நீயிருந்த நியாயஞ் சற்றே

பின்றெனக்கு வெளியாளு லெல்லாம் வல்ல
    விறைவாநின் னடியருட னிருந்து வாழ்வேன்.

வாழ்வெனவுந் தாழ்வெனவு மிரண்டாப் பேசும்
    வையகத்தார் கற்பனையா மயக்க மான
பாழ்வலையைக் கிழித்துதறிச் செயல்போய் வாழப்
    பரமேநின் னானந்தப் பார்வை யெங்கே. 6

எங்கேயெங் கேயருளென் றேமையி ரந்தா
    னேழைமையில் வெனவுமெண்ணி யிச்சைகூறு
மங்கேயங் கேயெளிவந் தென்னை யாண்ட
    வாரமுதே யுனைக்காண்பா னலந்து போனேன்.

போனநாட் கிரங்குவதே தொழிலா விங்ஙன்
    பொருந்துநா ளத்தனையும் போக்கி னேனென்
ஞானநா யகனேநின் மோன ஞான
    நாட்டமுற்று வாழ்ந்திருக்கு நாளெந்நாளோ.

நாட்பட்ட கமலமென்ன விதய மேவு
    நறுந்தேனே சன்மார்க்க நாரிமார்கண்
வாட்பட்ட காயமிந்தக் காய மென்றே
    வன்கூற்று முயிர்பிடிக்க வருமந் நீதி. 9

நீதியெங்கே மறையெங்கே மண்விண் ணெங்கே
    நித்தியா மவர்களெங்கே நெறிதப்பாத
சாதியெங்கே யொழுக்கமெங்கே யாங்க ளெங்கே
    தற்பரநீ பின்னுமொன்றைச் சமைப்பதானல்.

ஆனாலும் யானெனதிங் கற்ற வெல்லை
யதுபோது மதுகதிதா னல்ல வென்று
போனாலும் யான்போவ னல்லான் மோனப்
புண்ணியனே வேறுமொரு பொருளை நாடேன்.

பொருளேநின் பூரணமே விட்ட காலம்
போக்குவர வுண்டோதற் போத முண்டோ
விருடானுண்டோவல்லால்வெளிதா னுண்டோ[டோ.
வின்பமுண்டோ துன்பமுண்டோ யாமங்குண்

உண்டோநீ படைத்தவுயிர்த் திரளி லென்போ
லொருபாவி தேகாதி யுலகம் பொய்யாக்
கண்டேயு மெள்ளளவுந் துறவு மின்றிக்
காசினிக்கு ளலைந்தவரார் காட்டாய் தேவே.

தேவரெல்லாந் தொழச்சிவந்த செந்தாண் முக்கட்
செங்கரும்பே மொழிக்குமொழி தித்திப் பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்குந் திருச்செ விக்கே
மூடனேன் புலம்பியசொன் முற்றுமோ தான்.

முற்றுமோ வெனக்கினியா னந்த வாழ்வு
மூதறிவுக் கினியாய்நின் முளரித் தாளிற்
பற்றுமோ சற்றுமில்லை யையோ வையோ
பாவிபடுங் கட்கலக்கம் மார்த்தி லாயோ. 15

பார்த்தனவெல் லாமழியு மதனாற் சுட்டிப்
பாராதே பார்த்திருக்கப் பரமே மோன

மூர்த்திவடி வாயுணர்த்துங் கைகாட் டுண்மை
முற்றியென தல்லல்வினை முடிவ தென்றோ. 16

என்றுனைநீ யன்றுளம்யா மென்ப தென்னை
யிதுநிற்க வெல்லாந்தா மில்லை யென்றே
பொன்றிடச்செய் வல்லவனீ யெமைப்ப டைக்கும்
பொற்புடையா யென்னினது பொருந்திடாதே.

பொருந்துசக மனைத்தினையும் பொய்பொய் யென்று
புகன்றபடி மெய்யென்றே போத ரூபத்
திருந்தபடி யென்றிருப்ப தென்றே யன்றோ
வெம்பெருமான் யான்கவலை யெய்தாக் காலம்.

காலமே காலமொரு மூன்றுங் காட்டுங்
காரணமே காரணகா ரியங்க ளில்லாக்
கோலமே யெனைவாவா வென்று கூவிக் [சொல்லாய்.
குறைவறநின் னருள்கொடுத்தாற் குறைவோ

சொல்லாய தொகுதியெல்லாங் கடந்து நின்ற
சொரூபானந் தச்சுடரே தொண்ட னேனைக்
கல்லாகப் படைத்தாலு மெத்த நன்றே
கரணமுட னுறவு கலக்க மாட்டேன். 20

கலங்காத நெஞ்சுடைய ஞான தீரர்
கடவுளுனைக் காணவே காய மாதி
புலங்காணார் நானொருவன் ஞானம் பேசிப்
பொய்க்கூடு காத்ததென்ன புதுமைகண்டாய்.

கண்டிலையோ யான்படும்பா டெல்லா மூன்று
கண்ணிருந்துந்தெரியாதோ கசிந்துள்ளன்பார்
தொண்டரடித் தொண்டனன்றோ கருணை நீங்காச்
சுத்தபரி பூரணமாஞ் சோதி நாதா. 22

சோதியா யிருட்பிழம்பைச் சூறை யாடுந் [ங்காளும்
தூவெளியே யெனைத்தொடர்ந்து தொடர்ந்தெ
வாதியா நின்றவினைப் பகையை வென்ற
வாழ்வேயிங் குனைப்பிரிந்து மயங்கு கின்றேன்,

மயக்குறுமென் மனம்ணுகாப் பாதை காட்டி
வல்வினையைப் பறித்தனையே வாழ்வேநானென்
செயக்கடவேன் செயலெல்லா நினதே யென்று
செங்கைகுவிப் பேனல்லாற் செயல்வே றில்லை.

வேறுபடுஞ் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின் [ன்
விளங்குபரம் பொருளேநின் விளையாட் டல்லா
மாறுபடுங் கருத்தில்லை முடிவின் மோன
வாரிதியி னதித்திரள்போல் வயங்கிற் றம்மா.

அம்மாவீ ததிசயந்தா னன்றோ வன்றோ [ஞ்
வகண்டநிலை யாக்கியென்னை யறிவாம் வண்ண
சும்மாவே யிருக்கவைத்தா யையா வாங்கே
சுகமயமாயிருப்பதல்லாற்சொல்வா னென்னே.

என்னேநான் பிறந்துழல வந்த வாறிங் [பான்
கெனக்கெனவோர்செயலிலையே யேழையேன்

முன்னேசெய் வினையெனவும் பின்னே வந்து
மூளும்வினை யெனவும்வரு முறையே னெந்தாய்.

தாயான தண்ணருளை நிரம்ப வைத்துத்
தமியேனைப் புரவாமற் றள்ளித் தள்ளிப்
போயான தென்கொலையா வேக தேசம்
பூணத்துக் குண்டோதான் புகலல்வேண்டும்.

புகலரிய நின்விளையாட் டென்னே யெந்தாய்
புன்மையறி வுடையனென்னைப் பொருளாப் [பண்ணி
பிகல்விளக்கு மலமாயை கன்மத் தூடே
பிடருறவுஞ் செய்தனையே யிரக்க மீதோ. 29

இரக்கமொடு பொறையீத லறிவா சார
மில்லேனு னல்லோர்க ளீட்டங் கண்டாற்
கரக்குமியல் புடையேன்பாழ் நெஞ்ச மெந்தாய்
கருந்தாதோ வல்லுருக்கோ கரிய கல்லோ. 30

## பராபரக்கண்ணி

சீராருந் தெய்வத் திருவருளாம் பூமிமுதற்
பாராதி யாண்ட பதியே பராபரமே. 1

கண்ணூரக் கண்டோர் கருப்பொருள்கா ணுமலருள்
விண்ணூ டிருந்தவின்ப வெற்பே பராபரமே. 2

சிந்தித்த வெல்லாமென் சிந்தையறிந் தேயுதவ
வந்த கருணை மழையே பராபரமே. 3

ஆரா வமுதே யரசேயா னந்தவெள்ளப்
பேராறே மோனப் பெருக்கே பராபரமே. 4

ஆரறிவா ரென்ன வனந்தமறை யோலமிடும்
பேரறிவே யின்பப் பெருக்கே பராபரமே. 5

உரைபிறந்தவன்பருளத் தோங்கொளியா யோங்கிக்
கரைபிறந்த வின்பக் கடலே பராபரமே. 6

எத்திக்குந் தானாகி யென்னிதயத் தேயூறித்
தித்திக்கு மானந்தத் தேனே பராபரமே. 7

திக்கொடுகீழ்மேலுந் திருவருளாம்பொற்பறிந்தோர்
கைக்குள்வளர் நெல்லிக் கனியே பராபரமே. 8

முத்தே பவளமே மொய்த்தபசும் பொற்சுடரே
சித்தேயென் னுள்ளத் தெளிவே பராபரமே. 9

கண்ணே கருத்தேயென் கற்பகமே கண்ணிறைந்த
விண்ணே யானந்த வியப்பே பராபரமே. 10

வாக்காய் மனதாய் மனவாக் கிறந்தவர்பாற்
றூக்காதே தாக்குந் தனியே பராபரமே. 11

பார்த்தவிடமெல்லாம் பரவெளியாய்த் தோன்ற
வொரு, வார்த்தைசொல்லவந்த மனுவே பராபரமே.

வானந்த மண்ணினந்தம் வைத்துவைத்துப் பார்
க்கவெனக், கானந்தந் தந்த வரசே பராபரமே. 13

அன்பைப் பெருக்கியென தாருயிரைக் காக்கவந்த
வின்பப் பெருக்கே யிறையே பராபரமே. 14

வானமெல்லாங் கொண்ட மௌனமணிப்பெட்ட
கத்துக், கானபணி யான வணியே பராபரமே. 15

ஓடு மிருநிதியு மொன்றாகக் கண்டவர்க
ளூடும் பொருளான நட்பே பராபரமே. 16

சித்த நினைவுஞ் செயுஞ்செயலு நீயெனவா
முத்தமர்கட் கான வுறவே பராபரமே. 17

போதாந்தப் புண்ணியர்கள் போற்றிசய போற்றி
யெனும், வேதாந்த வீட்டில்விளக்கே பராபரமே.

முத்தாந்த வீதி முளரிதொழு மன்பருக்கே
சித்தாந்த வீதிவருந் தேவே பராபரமே. 19

ஈனந் தருமுடல மென்னதியா னென்பதற
வானந்தம் வேண்டி யலந்தேன் பராபரமே. 20

என்புருகி நெஞ்ச மிளகிக் கரைந்துகரைத்
தன்புருவாய் நிற்க வலந்தேன் பராபரமே. 21

சுத்த வறிவாய்ச் சுகம்பொருந்தி னல்லாலென்
சித்தந் தெளியாதென் செய்வேன் பராபரமே. 22

மாறு வனுபூதி வாய்க்கினல்லா லென்மயக்கந்
தேறுதென் செய்வேன் சிவமே பராபரமே. 23

தாகமறுத் தின்பநிட்டை தாராயே லாகெடுவேன்
தேகம்விழுந் திடினென் செய்வேன் பராபரமே. 24

அப்பாவென் னெய்ப்பில்வைப்பே யாற்று
கிலேன்போற்றியென்று, செப்புவதல்லால்வேறென்
செய்வேன் பராபரமே. 25

உற்றறியு மென்னறிவு முட்கருவி போற்சவிமாண்
டற்றுமின்பந் தந்திலையே யையா பராபரமே. 26

சொல்லா லடங்காச் சுகக்கடலில் வாய்மடுக்கி
லல்லா லென்ருக மறுமோ பராபரமே. 27

பாராயோ வென்னைமுகம் பார்த்தொருகா லென்
கவலை, தீராயோ வாய்திறந்து செப்பாய் பராபரமே.

ஓயாதோ வென்கவலை யுள்ளேயா னந்தவெள்ளம்
பாயாதோ வையா பகராய் பராபரமே. 29

ஓகோ வுனைப்பிரிந்தா ருள்ளங் கனலில்வைத்த
பாகோ மெழுகோ பகராய் பராபரமே. 30

கூர்த்தவறி வத்தனையுங் கொள்ளைகொடுத் துன்
னருளைப், பார்த்தவனே னென்னைமுகம் பாராய் பரா
பரமே. 31

கடலமுதே தேனேயென் கண்ணே கவலைப்
படமுடியா தென்னைமுகம் பார்நீ பராபரமே. 32

உள்ள மறிவா யுழப்பறிவாய் நானேழை
தள்ளிவிடின் மெத்தத் தவிப்பேன் பராபரமே. 33

கன்றினுக்குச் சேதா கனிந்திரங்கல் போலவெனக்
கென்றிரங்கு வாய்கருணை யெந்தாய் பராபரமே. 34

எண்ணாத வெண்ணமெலா மெண்ணியெண்ணி
யேழைநெஞ்சம், புண்ணாகச் செய்ததினிப் போதும்
பராபரமே. 35

ஆழித் துரும்பெனவே யங்குமிங்கு முன்னடிமை
பாழிற் றிரிவதென்ன பாவம் பராபரமே. 36

கற்றவறிவா லுனைநான் கண்டவன்போற் கூத்
தாடிற், குற்றமென் றென்னெஞ்சே கொதிக்கும் பரா
பரமே. 37

ஐயோ வுனைக்காண்பா னாசைகொண்ட தத்தனையும்
பொய்யோ வெளியாப் புகலாய் பராபரமே. 38

துன்பக் கண்ணீரிற் றுளைந்தேற்குன் னானந்த
வின்பக்கண் ணீர்வருவ தெந்நாள் பராபரமே. 39

வஞ்சனையும்பொய்யுமுள்ளே வைத்தழுக்காறுயுளாற
நெஞ்சனுக்கு முண்டோ நெறிதான் பராபரமே. 40

பாசம்போய் நின்றவர்போற் பாராட்டி யானுமொரு
மோசம்போ னேனென் முறையோ பராபரமே. 41

நன்றறியேன் றீதறியே னென்று நின்றவனு
ரென்றறியே னேழை யென்னே பராபரமே. 42

இன்றுபுகி தன்றே யெளியேன் படுந்துயர
மொன்று மறியாயோ வுரையாய் பராபரமே. 43

எத்தனைதான் சன்மமெடுத் தெத்தனைதான் பட்டதுய
ரத்தனையு நீயறிந்த தன்றோ பராபரமே. 44

இந்தநாட் சற்று மிரங்கிலையேற் காலன்வரு
மந்தநாட் காக்கவல்லா ராகாண் பராபரமே. 45

உற்றுற்று நாடி யுளமருண்ட பாவியைநீ
சற்றிரங்கி யாளத் தகாதோ பராபரமே. 46

எள்ளளவு நின்னைவிட வில்லா வெனைமயக்கிற்
றள்ளுதலா லென்னபலன் சாற்றாய் பராபரமே. 47

பாடிப் படித்துலகிற் பாராட்டி நிற்பதற்கோ
தேடி யெனையடிமை சேர்த்தாய் பராபரமே. 48

சொன்னத்தைச் சொல்வதல்லாற் சொல்லற வென் சொல்லிறுதிக், கென்னத்தைச் சொல்வே னெளியேன் பராபரமே. 49

சொல்லும் பொருளுமற்றுச் சும்மா விருப்பதற்கே
யல்லும் பகலுமெனக் காசை பராபரமே. 50

நேச நிருவிகற்ப நிட்டையல்லா லுன்னடிமைக்
காசையுண்டோ நீயறியா தன்றே பராபரமே. 51

துச்சனென வேண்டாமித் தொல்லுலகி லல்லல்
கண்டா, லச்சமிக வுடையே னையா பராபரமே. 52

கண்ணாவா ரேனுமுனைக் கைகுவியா ராயினந்த
மண்ணாவார் நட்பை மதியேன் பராபரமே. 53

கொல்லா விரதங் குவலயமெல் லாமோங்க
வெல்லார்க்குஞ்சொல்லுவதென் னிச்சைபராபரமே

எத்தாற் பிழைப்பேனோ வெந்தையே நின்னருட்கே
பித்தானேன் மெத்தவுநான் பேதை பராபரமே. 55

வாயினாற் பேசா மௌனத்தை வைத்திருந்துந்
தாயிலார் போனான் றளர்ந்தேன் பராபரமே. 56

அன்னையிலாச்சேய்போ லலக்கணுற்றேன்கண்ணார
வென்னகத்திற் றாய்போ லிருக்கும் பராபரமே. 57

உற்றுநினைக் கிற்றுயர முள்ளுள்ளே செந்தீயாய்ப்
பற்றகொந்தே னென்னைமுகம் பார்நீ பராபரமே. 58

பொய்யனிவ னென்றுமெள்ளப் போதிப்பார்
சொற்கேட்டுக், கைவிடவும் வேண்டாமென் கண்
ணே பராபரமே. 59

எண்ணமறிந்தே யிளைப்பறிந்தே யேழை யுய்யும்
வண்ணந் திருக்கருணை வையாய் பராபரமே. 60

நாட்டாதே யென்னையொன்றி னாட்டி யிதமகிதங்
காட்டாதே யெல்லாநீ கண்டாய் பராபரமே. 61

உன்னைநினைந் துன்னிறைவி னுள்ளேயுலாவு மென்னை
யன்னைவயிற் றின்னமடைக் காதே பராபரமே. 62

பரமுனக்கென் றெண்ணும் பழக்கமே மாரு
வரமெனக்குத் தந்தருளென் வாழ்வே பராபரமே.

வந்தித்து நின்னை மறவாக் கடனாகச்
சிந்திக்க நின்னதருள் செய்யாய் பராபரமே. 64

எவ்வுயிரு மென்னுயிர்போ லெண்ணி யிரங்கவுநின்
றெய்வவருட் கருணை செய்யாய் பராபரமே. 65

வெட்டவெளிப் பேதையன்யான் வேறாகப
டொன்றறியேன், சிட்டருடன்சேரனந்த தெண்டம்
பராபரமே. 66

இரவுபக லற்றவிடத் தேகாந்த யோகம்
வரவுந் திருக்கருணை வையாய் பராபரமே. 67

மால்காட்டிச் சிந்தை மயங்காம னின்றுசுகக்
கால்காட்டி வாங்காதே கண்டாய் பராபரமே 68

எப்பொருளு நீயெனவே யெண்ணிநான் றேன்றுத
வைப்பையழி யாநிலையா வையாய்பராபரமே. 69

சும்மா விருப்பதுவே சுட்டற்ற பூரணமென்
றெம்மா லறிதற் கெளிதோ பராபரமே. 70

முன்னெடுபின் பக்க முடியடிநாப் பண்ணறநின்
றன்னெடுநா னிற்பதென்றோ சாற்றாய் பராபரமே.

மைவண்ணந் தீர்ந்த மவுனிசொன்ன தெவ்வண்ண
மவ்வண்ண நிட்டை யருளாய் பராபரமே. 72

வித்தன்றி யாதும் விளைவதுண்டோ நின்னருளாஞ்
சித்தன்றி யாங்களுண்டோ செப்பாய் பராபரமே.

ஆங்கார மற்றுன் னறிவான வன்பருக்கே
தூங்காத தூக்கமது தூக்கும் பராபரமே. 74

சிந்தை யவிழ்ந்தவிழ்ந்து சின்மயமா நின்னடிக்கே
வந்தவர்க்கே யின்பநிலை வாய்க்கும் பராபரமே. 75

சொல்லாடா வூமரைப்போற் சொல்லிறந்து நீயாகி
னல்லா லெனக்குமுத்தி யாமோ பராபரமே. 76

பேச்சாகா மோனம் பிறவா முளைத்ததென்றற்
காச்சாச்சு மேற்பயனுண் டாமோ பராபரமே. 77

கெட்டியென்றுன் னன்பர்மலங் கெட்டயர்ந்
தோர் பூரணமாந், தொட்டிலுக்குட் சேய்போற்
றுயின்றூர் பராபரமே. 78

காட்ட வருளிருக்கக் காணு திருண்மலத்து
நாட்ட மெனக்குவர னன்றோ பராபரமே. 79

எத்தன்மைக் குற்ற மியற்றிடினுந் தாய்பொறுக்கு
மத்தன்மை நின்னருளு மன்றோ பராபரமே. 80

எத்தனையோ தேர்ந்தாலு மென்னுலே யின்ப
முண்டோ, சித்தருவே யின்பச் சிவமே பராபரமே.

மண்ணெடுவிண் காட்டி மறைந்துமறை யாவருனைக்
கண்ணெடுகண்ணுகவென் று காண்பேன்பராபரமே.

பஞ்சரித்து நின்னைப் பலகா லிரந்ததெல்லா
மஞ்சலெனும் பொருட்டே யன்றோ பராபரமே. 83

எங்கெங்கே பார்த்தாலு மெவ்வுயிர்க்கு மவ்வுயிரா
யங்கங் கிருப்பதுநீ யன்றோ பராபரமே. 84

அனைத்துமாய் நின்றாயே யான்வேறோ நின்னை
நினைக்குமா றெங்கே நிகழ்த்தாய் பராபரமே. 85

நின்போதத் தாலே நினைப்பு மறப்புமென்று
லென்போத மெங்கே யியம்பாய் பராபரமே. 86

ஒன்றைநினைந் தொன்றைமறந் தோடுமன மெல்லாநீ
யென்றறிந்தா லெங்கே யியங்கும் பராபரமே. 87

கொழுந்தில் வயிரமெனக் கோதறவுள் ளன்பி
லழுந்துமவர்க் கேசுகமுண் டாகும் பராபரமே. 88

பற்றும் பயிர்க்குப் படர்கொழுந்து போற்பருவம்
பெற்றவர்க்கே நின்னருடான் பேறும் பராபரமே.

யோகியர்க்கே ஞான மொழுங்காம்பே ரன்பான
தாகியரும் யோகமுன்னே சார்ந்தோர் பராபரமே.

அல்லும் பகலு மறிவாகி நின்றவர்க்கே
சொல்லும் பொருளுஞ் சுமைகாண் பராபரமே. 91

எச்சிலென்று பூவை யிகழ்ந்தோர்க்குணைப்போற்றப்
பச்சிலையுங் கிள்ளப் படுமோ பராபரமே. 92

அந்தக் கரண மடங்கத் துறப்பதுவே
யெந்தத் துறவினுநன் றெந்தாய் பராபரமே. 93

தன்னை யறிந்தாற் றலைவன்மேற் பற்றலது
பின்னையொரு பற்றுமுண்டோ பேசாய் பராபரமே.

அன்பாற் கரைந்துகண்ணீ ராறுகண்டபுண்ணியருக்
குன்பால் வரவழிதா னுண்டோ பராபரமே. 95

தன்னை யறிந்தருளே தாரகமா நிற்பதுவே
உன்னை யறிதற் குபாயம் பராபரமே. 96

கற்றகலை யானிலைதான் காணுமோ காண்பதெல்லா
மற்றவிடத்தே வெளியா மன்றோ பராபரமே. 97

கண்மூடிக் கண்விழித்துக் காண்பதுண்டோ நின்ன
ருளாம், விண்மூடினெல்லாம் வெளியாம்பராபரமே.

நேரே நினதருளென் னெஞ்சைக் கவரினன்றும்
பாரேன் சுகமும் படைப்பேன் பராபரமே. 99

வான்காண வேண்டின் மலையேற லொக்குமுன்னை
நான்காணப் பாவனைசெய் நாட்டம்பராபரமே. 100

வாதனைவிட் டுன்னருளின் மன்னினல்லாள் வேறு
மொரு,சாதனைதா னுண்டோநீசாற்றாய் பராபரமே.

பாரகமும் விண்ணகமும் பற்றாக நிற்பதருட்
டாரகத்தைப் பற்றியன்றோ சாற்றாய் பராபரமே.

விளக்குந் தகளியையும் வேறென்னார் நின்னைத்
துளக்கமறச் சீவனென்று சொல்வார் பராபரமே.

பாராதி நீயாப் பகர்ந்தா லகமெனவு
மாராயுஞ் சீவனுநீ யாங்காண் பராபரமே. 104

பொய்யைப்பொய் யென்றறியும் போதத்துக் காதர
வுன், மெய்யருளே யன்றோ விளம்பாய் பராபரமே.

வருவான்வந் தேனெனல்போன் மன்னியழியுஞ்சக
த்தைத், தெரிவாக வில்லையென்ற தீரம் பராபரமே.

மாயா சகமில்லையேன் மற்றெனக்கோர் பற்றுமில்லை
நீயேநா னென்றுவந்து நிற்பேன் பராபரமே 107

வானாதி நீயெனவே வைத்தமறை யென்னையுநீ
தானாகச் சொல்லாதோ சாற்றாய் பராபரமே. 108

வெள்ளக் கருணைமத வேழமா நின்னருட்கென்
கள்ளக் கருத்தே கவளம் பராபரமே. 109

வண்டாய்த் துவண்டு மௌன மலரணைமேற்
கொண்டார்க்கோ வின்பங்கொடுப்பாய் பராபரமே.

மாயைமுத லாம்வினைநீ மன்னுயிர்நீ மன்னுயிர்தேர்ந்
தாயுமறி வானதுநீ யன்றோ பராபரமே. 111

என்னறிவும் யானுமென தென்பதுவு மாமிவகை
யின்னவையே யன்றோ நிகழ்த்தாய் பராபரமே.

பாரறியா தண்டப் பரப்பறியா துன்பெருமை
யாரறிவார் நானோ வறிவேன் பராபரமே. 113

அண்ட மனைத்திலுமா யப்பாலுக் கப்பாலுங்
கொண்டநின்னை யாரறிந்து கொள்வார் பராபரமே.

ஒப்புயர்வொன் றின்றி யொலிபுகா மோனவட்டக்
கப்பலுக்காம் வான்பொருணீ கண்டாய்பராபரமே.

என்போ லெளியவரு மெங்கெங்கும் பார்த்தாலும்
உன்போல் வலியவரு முண்டோ பராபரமே. 116

பார்க்கினண்ட பிண்டப் பரப்பனைத்து நின்செயலே
யார்க்குஞ் செயலிலையே யையா பராபரமே. 117

ஒன்றே பலவே யுருவே யருவேயோ
வென்றே யழைப்பதுன்னை யென்றோ பராபரமே.

செப்புவதெல் லாஞ்செபநான் சிந்திப் பதெல்லாநின்
ஞெப்பி றியானமென வோர்ந்தேன் பராபரமே.

ஆரிருந்தென் ஞர்போயென் ஞரமுதா நின்னருளின்
சீரிருந்தா லுய்வேன் சிவமே பராபரமே. 120

வஞ்சகமன் வாதனைக்கும் வன்பிறவி வேதனைக்கு
மஞ்சி யுனையடைந்தே னையா பராபரமே. 121

எந்தப் படியுன் னிதய மிருந்ததெமக்
கந்தப் படிவருவ தன்றோ பராபரமே. 122

எந்தெந்த நாளு மெனைப்பிரியா தென் னுயிராய்ச்
சிந்தைகுடி கொண்டவருட் டேவே பராபரமே.123

அஞ்சலஞ்சலென்றடிமைக்கப்போதைக்கப்போதே
நெஞ்சி லுணர்த்து நிறைவே பராபரமே. 124

என்னையுன்றன் கைக்களித்தார் யாவரென்னை
யான்கொடுத்துப், பின்னையுன்றற் பெற்றநலம்
பேசேன் பராபரமே. 125

வாய்பேசாவூமையெனவைக்கவென்றோநீமௌனத்
தாயாக வந்தருளைத் தந்தாய் பராபரமே. 126

தன்னைத்தந் தென்னைத் தடுத்தாண்ட நின்கருணைக்
கென்னைக்கொண்டென்னபலனெந்தாய் பராபரமே.

மார்க்கண்டர்க் காக மறலிபட்ட பாட்டையுன்னிப்
பார்க்கினன்பர்க் கென்ன பயங்காண் பராபரமே.

சுட்டியுண ராமற் றுரியநிலை யாய்வெளியில்
விட்டநின்னை யானோ வியப்பேன் பராபரமே. 129

சூதொன் றுமின் றியென்னைச் சும்மாவிருக்கவைத்தா
யீதொன்றும் போதாதோ வின்பம் பராபரமே. 130

வாயொன் றும் பேசா மௌனியாய் வந்தாண்ட
தேயொன் றும் போதாதோ வின்பம்பராபரமே.131

என்று மிருந்தபடிக் கென்னை யெனக்களித்த
தொன் றும்போ தாதோ வுரையாய் பராபரமே. 132

எண்டிசைக்கீழ்மேலானவெல்லாம்பெருவெளியாக்
கண்டவிடத் தென்னைபுநான் கண்டேன் பராபரமே.

பித்தனையே தும்மறியாப் பேதையனை யாண்டவுனக்
கெத்தனைதான் றெண்ட மிடுவேன் பராபரமே. 134

தாயர்கர்ப்பத் தூடனமுந் தண்ணீருந் தந்தருளு
நேயவுனை யாரே நினையார் பராபரமே. 135

விரிந்த மனமொடுங்கும் வேளையினு ளுகப்
பரந்தவருள் வாழி பதியே பராபரமே. 136

சிந்தனைபோய் நானெனல்போய்த் தேக்கவின்ப மா
வந்து பொழிந்தனைநீ வாழி பராபரமே. [மழை

தந்தேனே யோர்வசனந் தந்தபடிக் கின்பமுமாய்
வந்தேனே யென்றனைநீ வாழி பராபரமே. 138

மண்ணும்விண்ணும் வந்து வணங்காவோ நின்
னருளைக், கண்ணுறவுட் கண்டவரைக் கண்டாற்
பராபரமே. 139

என்றுங் கருணைபெற்ற வின்பத்த போதனர்சொல்
சென்றசென்ற திக்கனைத்துஞ் செல்லும்பராபரமே.

ஆடுவதும் பாடுவது மானந்த மாகநின்னைத்
தேடுவது நின்னடியார் செய்கை பராபரமே. 141

பொங்கியநின் றண்ணருளைப் புட்கலமாப்பெற்றவர்
கெங்கெழுந்தென் ஞாயி றியம்பாய் பராபரமே.[கட்

பாலரொடு பேயர்பித்தர் பான்மையென நிற்பதுவே
சீலமிகு ஞானியர்தஞ் செய்கை பராபரமே. 143

உண்டுடுத்துப் பூண்டிங் குலகத்தார் போற்றிரியுந்
தொண்டர்விளை யாட்டே சுகங்காண் பராபரமே.

கங்குல்பக லற்றதிருக் காட்சியர்கள் கண்டவழி
யெங்கு மொருவழியே யெந்தாய் பராபரமே. 145

காயகிலே யல்லவென்று காண்பா ருறங்குவரோ
தூயவருட் பற்றுத் தொடர்வார் பராபரமே. 146

அப்புமுப்பும் போன்ற வபிக்யபரா னந்தர்தமக்
கொப்புவமை சொல்லவும்வா யுண்டோ பராபரமே.

சித்தந் தெளிந்து சிவமானோ ரெல்லோர்க்குங்
கொத்தடிமை யான குடிநான் பராபரமே. 148

தம்முயிர்போ லெவ்வுயிருந் தானென்று தண்
ணருள்கூர், செம்மையருக் கேவலென்று செய்வேன்
பராபரமே. 149

விண்ணுக்கும் விண்ணாகி மேவுமுனக் கியான்பூசை
பண்ணிநிற்கு மாறு பகராய் பராபரமே. 150

நெஞ்சகமே கோயி னினைவே சுகந்தமன்பே
மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே. 151

கெட்டவழி யாணவப்பேய் கீழாக மேலான
சிட்டருனைப் பூசை செய்வார் பராபரமே. 152

கால்பிடித்து மூலக் கனலைமதி மண்டலத்தின்
மேலெழுப்பிற் றேகம் விழுமோ பராபரமே. 153

பஞ்சசுத்தி செய்துநின்னைப் பாவித்துப் பூசைசெய்
தால், விஞ்சிய ஞானம் விளங்கும் பராபரமே. 154

அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டுவிட்டா
லின்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே. 155

மூர்த்திதலந் தீர்த்த முறையாற் றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச்சற்குருவும் வாய்க்கும்பராபரமே.

விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான நான்கு
மரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே. 157

தானந் தவந்தருமஞ் சந்ததமுஞ் செய்வர்சிவ
ஞானந் தனையணைய நல்லோர் பராபரமே. 158

சொன்னத்தைச் சொல்லித் துடிக்கின்ற வாணவப்
பேய்க், கின்னல்வருவதெந்நா ளெந்தாய்பராபரமே.

இன்றோ விருவினைவந் தேறியது நானென்றோ
வன்றே விளைந்ததன்றோ வாற்றேன் பராபரமே. 160

எண்ணமுந்தா னின்னைவிட வில்லையென்றால் யான்
முனமே, பண்ணவினை யேது பகராய் பராபரமே.

என்னைபின்னதென் றறியாவேழைக்குமாகெடுவேன்
முன்னைவினை கூடன் முறையோ பராபரமே. 162

அறியாநான் செய்வினையை யையாநீ கூட்டுங்
குறியே தெனக்குளவு கூறாய் பராபரமே. 163

என்னைக் கெடுக்க விசைந்த விருவினைநோய்
தன்னைக் கெடுக்கத் தகாதோ பராபரமே. 164

வல்லமையே காட்டுகின்ற மாமாயை நானொருவ
னில்லையெனி னெங்கே யிருக்கும் பராபரமே. 165

மூக்குணத்தா லெல்லா முளைக்கப் பிரகிருதிக்
கிக்குணத்தை நல்கியதா ரெந்தாய் பராபரமே. 166

ஆற்றப் படாததுன்ப மையவென்ற னென்மனதை
தேற்றப்படாதினியென் செய்வேன்பராபரமே. 167

பூராய மாய்மனதைப் போக்கவறி யாமலேயோ
யாரா யலைந்தே னரசே பராபரமே. 168

சினமிறக்கக் கற்றாலுஞ் சித்தியெல்லாம் பெற்றாலு
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே. 169

வாதுக்கு வந்தெதிர்த்த மல்லரைப்போற் பாழ்த்த
மன, மேதுக்குக் கூத்தாடு தெந்தாய் பராபரமே.

சூதாடு வார்போற் றுவண்டு துவண்டுமனம்
வாதாடி னென்னபலன் வாய்க்கும் பராபரமே. 171

கொள்ளித்தேள் கொட்டிக் குதிக்கின்றபேய்க் குரங்காய்க், கள்ளமனந் துள்ளுவதென் கண்டாய் பராபரமே. 172

வந்ததையும் போனதையும் வைத்துவைத்துப் பார்த் திருந்தாற், சிந்தை யிதமகிதஞ் சேரும் பராபரமே.

ஏறுமயிர்ப் பாலமுணர் விந்தவிட யங்கணொருப் பாறெனவு நன்றா வறிந்தேன் பராபரமே. 174

பொறிவழியே யேழை பொறியா யுழல்வதுநின் னறிவின் விதித்தவிதி யாமோ பராபரமே. 175

பாசசா லங்களெல்லாம் பற்றுவிட ஞானவைவாள் வீசுநா ளெந்நாள் விளம்பாய் பராபரமே. 176

எந்தவுட லேனு மெடுத்தவுட னல்லதென்று சிந்தைசெய வந்ததிறஞ் செப்பாய் பராபரமே. 177

பொய்யெல்லா மொன்றாப் பொருந்திவைத்த பொய் யுடலை,மெய்யென்றான்மெய்யாய்விடுமோபராபரமே.

மின்னனையபொய்யுடலை மெய்யென் றுநம்பியையோ நின்னை மறக்கை நெறியோ பராபரமே. 179

நித்தியமொன் றில்லாத நீர்க்குமிழி போன்றவுடற் கித்தனைதான் றுன்பமுண்டோவென்னேபராபரமே.

தேகமிறு மென்றுசடர் தேம்புவதென் னித்திரைபி
னாகமறிந் தாற்பயந்தா னுண்டோ பராபரமே. 181

ஏதைச் சுமையா வெடுப்பா ரெடுத்தவுடற்
சேதமுறின் யாதுபின்னே செல்லும் பராபரமே.

தோற்பாவை நாலாட் சுமையாகுஞ் சீவனென்றிங்
கார்ப்பா லெடுத்ததெவ ராலே பராபரமே. 183

ஞாலத்தை மெய்யெனவே நம்பிநம்பி நாளுமென்றன்
காலத்தைப் போக்கியென்ன கண்டேன் பராபரமே

யொய்யுலக வாழ்க்கைப் புலைச்சேரி வாதனைநின்
மெய்யருளின் மூழ்கின்விடுங்காண் பராபரமே. 185

நூலேணி விண்ணேற நூற்குப் பருத்திவைப்பார்
போலே கருவிநன்னூற் போதம் பராபரமே. 186

சின்னஞ்சிறியார்கள் செய்தமணற் சோற்றையொக்கு
மன்னுங் கலைஞான மார்க்கம் பராபரமே. 187

வாசகஞா னத்தால் வருமோ சுகம்பாழ்த்த
பூசலென்று போமோ புகலாய் பராபரமே. 188

கேட்டதையே சொல்லுங் கிளிபோல நின்னருளி
னாட்டமின்றி வாய்பேச னன்றோ பராபரமே. 189

வெளியா யருளில் விரவுமன்பர் தேக
மொளியாய்ப் பிறங்கியது முண்டோ பராபரமே.

காலமொரு மூன்றுங் கருத்திலுணர்ந் தாலுமதை
ஞாலந் தனக்குரையார் நல்லோர் பராபரமே. 191

கொல்லா விரதமொன்றுகொண்டவரேநல்லோர்மற்
றல்லாதார் யாரோ வறியேன் பராபரமே. 192

இல்லாத காரியத்தை யிச்சித்துச் சிந்தைவழி
செல்லாமை நல்லோர் திறங்காண் பராபரமே. 193

ஏதுவந்துமேதொழிந்து மென்னதியானென்னார்கள்
போதநிலை கண்ட புலத்தோர் பராபரமே. 194

ஆயிரஞ் சொன்னாலு மறியாத வஞ்சநெஞ்சப்
பேயரொடு கூடிற் பிழைகாண் பராபரமே. 195

மாய மயக்கொழிந்தார் மற்றொன்றை நாடுவரோ
நேய வருணிலையி னிற்பார் பராபரமே. 196

சித்திரையிற்செத்தபிணநேருமுடற்கிச்சைசைவயாச்
சுத்தர்களே நல்ல துறவோர் பராபரமே. 197

எந்நெஞ்ச மேனு மிரங்குமே நின்னருட்குக்
கன்னெஞ் சருமுளரோ காட்டாய் பராபரமே. 198

மந்தவறி வாகியின்பம் வாயா திருந்தலெந்தாற்
சிந்தை மயங்காதோ வென்செய்வேன் பராபரமே.

தேடினேன் றிக்கனைத்துந் தெண்டனிட்டேன்சிந்தை
நைந்து, வாடினேனென்மயக்கமாற்றாய் பராபரமே

மடிமையெனு மொன்றை மறுத்தன்றோ வென்னை
யடிமை கொளல்வேண்டு மரசே பராபரமே. 201

காலர்பயந் தீரவின்பக் காற்கபய மென்றெழுந்த
மாலை வளர்த்தனையே வாழி பராபரமே. 202

நீர்ப்புற் புதமாய் நினைவருட்கேநின் றழியப், பார்ப்ப
தல்லால் வேறுமொன்றைப் பாரேன் பராபரமே.

நீர்க்குமிழி போலென் னினைவுவெளி யாக்கரையப்
பார்க்குமிட மெல்லாமென்பார்வை பராபரமே.204

ஆடியோய் பம்பரம்போ லாசையுட னெங்குமுனைத்
தேடியோய் கின்றேனென் செய்வேன் பராபரமே.

வேதாந்தஞ் சித்தாந்தம் வேறென்னார் கண்களிக்கு
நாதாந்த மோன நலமே பராபரமே. 206

ஆனந்த மானநின்னை யன்றியொன்றை யுன்னாத
மோனந் தமியேற்கு முத்தி பராபரமே. 207

எதுக்கு முன்னேவிட வில்லையென்றுலென்கருத்லைதச்
சோதிக்க வேண்டாநான் சொன்னேன் பராபரமே.

முத்தியிலுந் தேகமிசை மூவிதமாஞ் சித்திபெற்றோ
ரெத்தனைபே ரென்றுரைப்ப தெந்தாய் பராபரமே.

நீயன்றி நானார் நினைவாரென் னெஞ்சகமார்
தாயன்றிச் சூலுமுண்டோ சாற்றாய்பராபரமே.210

அங்கமே நின்வடிவ மானசுகர் கூப்பிடநீ
யெங்குமே னேனென்ற தென்னே பராபரமே. 211

கொள்ளை வெள்ளத் தண்ணருண்மேற் கொண்டு
சுழித் தார்த்திழுத்தால், கள்ளமனக் கப்பலெங்கே
காணும் பராபரமே. 212

எக்கலையுங்கற்றுணர்ந்தோ மென்றவர்க்குஞ் சம்மத
ஞ்சொல், வக்கணையாலின்பம் வருமோ பராபரமே.

கல்லெறியப் பாசி கலைந்துநன்னீர் காணுநல்லோர்
சொல்லுணரின்ஞானம்வந்து தோன்றும்பராபரமே.

நின்னையுணர்ந் தோகடமை நிந்திக்க பேயறிஞ
ரென்ன கதிபெறுவா ரெந்தாய் பராபரமே. 215

என்னதியா னென்னலற்ருே ரெங்கிருந்துபார்க்கினு
நின், சன்னிதியா நீபெரிய சாமி பராபரமே. 216

சோற்றுத் துருத்திச் சுமைசுமப்பக் கண்பிதுங்கக்
காற்றைப் பிடித்தலைந்தேன் கண்டாய் பராபரமே.

உள்ளபடி யொன்றை யுரைக்கினவர்க் குள்ளுற
வாய்க், கள்ளமின்றி யன்பாய்க் களிப்பேன் பரா
பரமே. 218

அடுத்தவியல் பாகவொன்றை யான்பகர்வ தல்லாற்
ருடுத்தவொன்றை யான்வேண்டிச் சொல்லேன்
[பராபரமே.

உள்ளமறி யாதொருவ ரொன்றையுன்னிப் பேசி
லையோ, துள்ளியிளங் கன்ருய்த் துடிப்பேன் பரா
பரமே. 220

எல்லாரு மின்புற் றிருக்க நினைப்பதுவே
யல்லாமல் வேருென் றறியேன் பராபரமே. 221

முன்னுண் மெய்ஞ்ஞான முனிவர்தவ மீட்டுதல்போ
லின்னுளிற் காணவெனக் கிச்சை பராபரமே. 222

கன்மமென்ப தெல்லாங் கரிசரவே மெய்ஞ்ஞான
தன்மநிலை சார்ந்தவன்பர் தன்மை பராபரமே. 223

கண்டுயிலா தென்னறிவின் கண்ணூடே காட்சிபெற
மண்டிய பேரொளிநீ வாழி பராபரமே. 224

நானென தன்மையென்று நாடாம னுடலின்ப
வானாகி நின்றனைநீ வாழி பராபரமே. 225

அகத்து டணுவணுவா யண்டமெல்லாந் தானாய்
மகத்தாகி நின்றனைநீ வாழி பராபரமே. 226

காரகமாங் கர்ப்பவறைக் கண்ணூடு மென்கண்ணே
வாரம்வைத்துக் காத்தனைநீ வாழி பராபரமே. 227

பிறந்தோர்தந் தேசமென்பார் பூமியைப் போராடி
யிறந்தோருந் தம்மதென்பா ரென்னே பராபரமே.

மூர்த்தியெல்லாம் வாழியெங்கண் மோனகுரு வாழியருள், வார்த்தையொன்றும் வாழியன்பர் வாழி பராபரமே. 229

சொல்லும் பொருளுந் தொடரா வருணிறைவிற்
செல்லும் படிக்கருணை செய்தாய் பராபரமே. 230

இற்றைவரைக் குள்ளாக வெண்ணரிய சித்திமுத்தி
பெற்றவர்க ளெத்தனைபேர் பேசாய் பராபரமே. 231

நாடு நகருநிசா னட்டிய பாளயமு
மீடுசெயு மோமுடிவி லெந்தாய் பராபரமே. 232

தேடுந் திரவியமுஞ் சேர்ந்தமணிப் பெட்டகமுங்
கூட வருந்துணையோ கூறாய் பராபரமே. 233

தேடாததேட்டினரே செங்கைத்துலாக்கோல்போல்
வாடாச் சமனிலையில் வாழ்வார் பராபரமே. 234

நீராய்க் கசிந்துருகி நெட்டுயிர்த்து நின்றேனைப்
பாராத தென்னோ பகராய் பராபரமே. 235

உள்ளபொரு ளாவி யுடன்மூன்று மன்றேதான்
கொள்ளைகொண்ட நீயென் குறைதீர் பராபரமே.

ஆழ்ந்தாயே யிவ்வுலகி லல்லலெல்லாந் தீர்ந்தருளால்
வாழ்ந்தாயே யென்றனைநீ வாழி பராபரமே. 237

தாரா வருளையெல்லாந் தந்தெனையு நின்னருளில்
வாராயோ வென்றனைநீ வாழி பராபரமே. 238

ஆசையுன்மீ தல்லா லருளறிய வேறொன்றிற்
பாசம்வையே னின்கருணைப் பாங்காற் பராபரமே.

ஆதியந்த நீகுருவா யாண்டதல்லா னின்னையன்றிப்
போதனையு முண்டோ புகலாய் பராபரமே. 240

தானாக வந்து தடுத்தாண் டெனையின்ப
வானாகச் செய்தவின்ப வானே பராபரமே. 241

பற்றற் றிருக்குநெறி பற்றிற் கடன்மலையுஞ்
சுற்ற நினைக்குமனஞ் சொன்னேன் பராபரமே. 242

படிப்பற்றுக் கேள்வியற்றுப் பற்றற்றுச் சிந்தைத்
துடிப்பற்றூர்க் கன்றோ சுகங்காண் பராபரமே. 243

சத்தாகி நின்றோர் சடங்களி லிங்கமென
வைத்தாரு முண்டேயென் வாழ்வே பராபரமே.

சித்த நிருவிகற்பஞ் சேர்ந்தா ருடற்றீபம்
வைத்தகர்ப்பூ ரம்போல் வயங்கும் பராபரமே. 245

ஆதிகா லத்திலெனை யாண்டனையே யிப்பானீ
போதியெனி னெங்கேநான் போவேன் பராபரமே.

நாவழுத்துஞ் சொன்மலரோ நாலுதிக்கும்பொன் மலரோ, தேவையுனக் கின்னதென்று செப்பாய் பராபரமே, 247

கன்னறரும் பாகாய்க் கருப்புபட்டாய்க் கற்கண்டா
யின்னமுதா யென்னு ளிருந்தாய் பராபரமே. 248

சிற்பரமே தற்பரமே தெய்வச் சுருதிசொன்ன
வற்புதமே யன்பே யறிவே பராபரமே. 249

அறிவிப்பா னீயென்று லைம்புலங்க டந்தந்
நெறிநிற்பார் யாரே நிகழ்த்தாய் பராபரமே. 250

அந்தக் கரணமெனு மாகாத பேய்களெனை
வந்துபிடித் தாட்ட வழக்கோ பராபரமே. 251

ஐவரொடுங் கூடாம லந்தரங்க சேவைதந்த
தெய்வ வறிவே சிவமே பராபரமே. 252

அருளாகி நின்றசுக மாகாம லையோ
விருளாகி நிற்க வியல்போ பராபரமே. 253

அன்பரெல்லா மின்ப மருந்திடவும் யானொருவன்
துன்புருத னன்றோநீ சொல்லாய் பராபரமே. 254

சந்ததமு நின்கருணை சாற்றுவதல் லால்வேறு
சிந்தை யறியேனுன் சித்தம் பராபரமே. 255

நானா னெனக்குளறு நாட்டத்தா லென்னைவிட்டுப்
போனாலு முன்னைவிட்டுப் போகேன் பராபரமே

இக்காயம் பொய்யன்றோ ரீட்டத் துனக்கபயம்
புக்காதா ருண்டோ புகலாய் பராபரமே. 257

தானாதல் பூரணமே சாருமிட முண்டுயிரும்
வானா தியுமொழுங்காய் மன்னும் பராபரமே. 258

உன்னுமனங் கர்ப்பூர வுண்டைபோ லேகரைய
மின்னுமா னந்த விளக்கே பராபரமே. 259

நாட்பட் டலைந்த நடுக்கமெல்லாந் தீரவுனக்
காட்பட்டுந் துன்பமெனக் காமோ பராபரமே. 260

பாவிபடுங் கண்கலக்கம் பார்த்துமிரங் காதிருந்தா
லாவிக் குறுதுணையா ரையா பராபரமே. 261

நின்னிறைவே தாரகமாய் நின்றுசுக மெய்தாம
லென்னிறைவே பாவித்தே னென்னே பராபரமே.

நின்னைச் சரண்புகுந்தா னீகாக்க வேண்டுமல்லா
லென்னைப் புறம்விடுத லென்னே பராபரமே. 263

மாறாத துன்பமெல்லாம் வந்துரைத்தா னின்செவியி
லேறாத வாறே தியம்பாய் பராபரமே. 264

விஞ்சுபுலப் பாடனைத்தும் வீறுதுன்பஞ் செய்யவந்த
வஞ்சபுல வேடருக்கு மாற்றேன் பராபரமே. 265

கன்னங் கரியநிறக் காமாதி ராக்ஷசப்பேய்க்
கென்னையிலக் காகவைத்த தென்னே பராபரமே.

சித்திநெறி கேட்டல் செகமயக்கஞ் சன்மமற
முத்திநெறி கேட்டன் முறைகாண் பராபரமே. 267

சிந்தை சிதையச் சிதையாத வானந்த
மெந்தவகை யாலேவந் தெய்தும் பராபரமே. 268

கூர்த்தவறி வாலறியக் கூடா தெனக்குரவன்
றேர்த்தபடி தானே தெரிந்தேன் பராபரமே. 269

பத்த ரருந்தும் பரமசுகம் யானருந்த
வெத்தனைநாள் செல்லு மியம்பாய் பராபரமே. 270

தீரத்தி னூற்றூரவு சேராம லிவ்வுலகிற்
பாரத் தனம்பேசல் பண்போ பராபரமே. 271

இந்த வெளியிலையுண் டேப்பமிடப் பேறறிவாத்
தந்தவெளிக் கேவெளியாச் சார்ந்தேன் பராபரமே.

உணர்த்துமுனை நாடா துணர்ந்தவையே நாடி [மே.
பிணக்குறுமென் னேழைமைதா னென்னேபராபர

உண்டுபோ லின்று முலகைத் திரமெனவுட்
கொண்டுநான் பெற்றபலன் கூறாய் பராபரமே.274

உள்ளபடி யாதுமென வுற்றுணர்ந்தே னக்கணமே
கள்ளமனம் போனவழி காணேன் பராபரமே. 275

சித்தமவுனஞ் செயல்வாக் கெலாமவுனஞ்
சுத்த மவுனமென்பாற் றோன்றிற் பராபரமே 276

எண்ணில்பலகோடியுயி ரெத்தனையோவத்தனைக்குங்
கண்ணிற் கலந்தவருட் கண்ணே பராபரமே. 277

எனக்கினியா ருன்போலு மில்லையென் றல்யானு
முனக்கினியா னாகா வுளவேன் பராபரமே. 278

அண்டபிண்டங் காணே னகமும் புறமுமொன்றாக்
கண்டவென்னை நீகலந்த காலம் பராபரமே. 279

எத்தனையோகோடி யெடுத்தெடுத்துச் சொன்னாலுஞ்
சித்த மிரங்கிலையென் செய்வேன் பராபரமே. 280

அன்றந்த நால்வருக்கு மற்புதமா நீயுரைத்த
தொன்றந்த வார்த்தையெனக் குண்டோ பராபரமே.

அப்பனென்று மன்னையென்று மாரியனென் றும்முனையே, செப்புவது முன்னிலையின் சீர்காண் பராபரமே. 282

கட்டுங் கனமுமந்தக் காலர்வரும் போதெதிர்த்து
வெட்டுந் தளமோ விளம்பாய் பராபரமே, 283

பேசாத மோனநிலை பெற்றன்றோ நின்னருளாம்
வாசாம கோசரந்தான் வாய்க்கும் பராபரமே. 284

கற்றாலுங் கேட்டாலுங் காயமழி யாதசித்தி
பெற்றாலு மின்பமுண்டோ பேசாய் பராபரமே.285

கண்டவடி வெல்லாங் கரைக்கின்ற வஞ்சனம்போ
லண்டமெல்லா நின்னருளே யன்றோ பராபரமே.

தன்செயலா லொன்றுமிலை தானென்று னன்பாவி
நின்செயலாய் நில்லா நினைவேன் பராபரமே. 287

கொலைகளவு கட்காமங் கோபம்விட்டா லன்றோ
மலையிலக்கா நின்னருடான் வாய்க்கும் பராபரமே.

தன்னையன்றி யாதுசகந் தானு மிருந்துவிட்டா
லுன்னை யறியவரு முண்டோ பராபரமே. 289

ஒன்றிரண்டென் றன்னு வுணர்வுகொடுத் துள்ளபடி
யென்றுமென்னை வையா யிறையே பராபரமே. 290

கருதுமடி யார்களுளங் காணவெளி யாகுந்
துரியநிறை வான சுகமே பராபரமே. 291

பொய்குவித்த நெஞ்சனருட் பொற்பறிந்து திக்கனைத்
துங், கைகுவித்து நிற்பதெந்தக் காலம் பராபரமே.

அத்துவித மான வயிக்ய வனுபவமே
சுத்தநிலை யந்நிலையார் சொல்வார் பராபரமே. 293

வைத்த சுவரலம்பின் மண்போமோமாயையினோர்க்
கெத்தனைபோ தித்துமென்னு மெந்தாய் பராபரமே.

பூட்டற்றுத் தேகமற்றுப் போகுமுன்னே நின்னரு
ளைக், காட்டத் தகாதோவென் கண்ணே பராபரமே.

சொல்லிற் பதர்களைந்து சொன்முடிவு காணுதார்
நெல்லிற் பதர்போல நிற்பார் பராபரமே. 296

அழுக்காற்று னெஞ்சு மழுங்கியபுன் மாக்க
ளிழுக்காற்று லின்பநல மெய்தார் பராபரமே. 297

தேகாதி பொய்யெனவே தேர்ந்தவுப சாந்தருக்கு
மோகாதி யுண்டோ மொழியாய் பராபரமே. 298

சாதனையெல் லாமவிழத் தற்போதங் காட்டாதோர்
போதனைநீ நல்குவதெப் போதோ பராபரமே. 299

ஒன்றுமறி யாவிருளா முள்ளம் படைத்தவெனக்
கென்று கதிவருவ தெந்தாய் பராபரமே. 300

சிந்திக்குந் தோறுமென்னுட் சிற்சுகமா யூற்றூறிப்
புந்திக்கு ணின்றவருட் பொற்பே பராபரமே. 301

என்றுமடைந் தோர்கட் கிரங்கார் குறிப்பனைத்துங்
கன்றையுதை காலி கதைகாண் பராபரமே. 302

குற்றங் குறையக் குணமே விடவருளை
யுற்றவரே யாவிக் குறவாம் பராபரமே. 303

ஒருரையால்வாய்க்குமுண்மைக்கோ ரனந்த நூல்கோ
டிப், பேருரையாற்பேசிலென்ன பேறும் பராபரமே.

சொல்லுஞ் சமயநெறிச் சுற்றுக்குளே சுழலு
மல்லலொழிவ தென்றைக் கையா பராபரமே. 305

பிடித்ததையே தாபிக்கும் பேரா ணவத்தை
யடித்துத் துரத்தவல்லா ரார்காண் பராபரமே. 306

நேசத்தா னின்னை நினைக்கு நினைவுடையார்
ஆசைக் கடலி லழுந்தார் பராபரமே. 307

கள்ளாது கட்டுணவுங் காரியமோ நானொருசொற்
கொள்ளாத தோஷமன்றோ கூறாய் பராபரமே. 308

சென்றவிட மெல்லாந் திருவருளே தாரகமா
நின்றவர்க்கே யானந்த நிட்டை பராபரமே. 309

நீட்சி குறுகவில்லா நித்தியசுகா ரம்பசக
சாக்ஷியா முன்னைவந்து சார்ந்தேன் பராபரமே, 310

வானாதி தத்துவமாய் மன்னிநின்ற காரணநீ
தானாகி நிற்பதெந்த நாளோ பராபரமே. 311

காட்டத்தி லங்கி கடையவந்தா லென்னவுன்னும்
நாட்டத்தி னூடுவந்த நட்பே பராபரமே. 312

நித்திரையாய்த் தானே நினைவயர்ந்தா னித்தநித்தம்
செத்தபிறைப் பானதெங்கள் செய்கை பராபரமே.

இன்பநிட்டை யெய்தாமல் யாதெனினுஞ் சென்று
மனம், துன்புறுதல் வன்பிறவித் துக்கம் பராபரமே.

பொய்யகல மெய்யான போதநிலை கண்டோர்க்கோ
ரையமிலை யையமிலை யையா பராபரமே. 315

வந்திரத்தை யுன்னி மயங்கா தெனக்கினியோர்
தந்திரத்தை வைக்கத் தகாதோ பராபரமே. 316

விண்கருணை பூத்ததென மேவி யுயிர்க்குயிராய்த்
தண்கருணை தோன்றவரு டாய்நீ பராபரமே. 317

தன்மயமாய் நின்றநிலை தானேதா னாகிநின்று
னின்மயமா யெல்லா நிகழும் பராபரமே. 318

எங்கி யிடையுநெஞ்ச வேழையைநீ வாவென்றே
பாங்குபெறச் செய்வதுன்மேற் பாரம் பராபரமே.

ஆண்டநின்னை நீங்கா வடிமைகள்யா மாணவத்தைப்
பூண்டதென்ன கன்மம் புகலாய் பராபரமே. 320

எங்கணுநீ யென்று விருந்தபடி யெய்தாம
லங்குயிங்கு மென்றலைய லாமோ பராபரமே. 321

கற்குமது வுண்டு களித்ததல்லா னின்னருளி
னிற்குமது தந்ததுண்டோ நீதான் பராபரமே. 322

அண்டபகி ரண்ட மறியாத நின்வடிவைக்
கண்டவரைக் கண்டாற் கதியாம் பராபரமே. 323

கலக்கமுற நெஞ்சைக் கலக்கித் திரும்பத்
துலக்குபவ னீயலையோ சொல்லாய் பராபரமே.324

சிந்தையு மென்போலச் செயலற் றடங்கிவிட்டால்
வந்ததெலா நின்செயலா வாழ்வேன் பராபரமே.325

பந்தமெலாந் தீரப் பரஞ்சோதி நீகுருவாய்
வந்த வடிவை மறவேன் பராபரமே. 326

தானந்த மான சகச நிருவிகற்ப
வானந்த நிட்டையரு ளையா பராபரமே. 327

அல்லலெல்லாந் தீரவெனக் கானந்த மாக
வொரு, சொல்லையென்பால் வைத்ததையென்சொல்
வேன் பராபரமே. 328

சிந்தை மயக்கமறச் சின்மயமாப் நின்றவுன்னைத்
தந்தவுனக் கென்னையுநான் றந்தேன் பராபரமே.

மைகாட்டு மாயை மயக்கமற நீகுருவாய்க்
கைகாட்ட வுங்கனவு கண்டேன் பராபரமே. 330

மால்வைத்த சிந்தை மயக்கறவன் சென்னிமிசைக்
கால்வைக்க வுங்கனவு கண்டேன் பராபரமே. 331

மண்ணான மாயையெல்லா மாண்டுவெளி யாகவிரு
கண்ணார வுங்கனவு கண்டேன் பராபரமே. 332

மண்ணீர்மை யாலே மயங்காதுன் கையாலென்
கண்ணீர் துடைக்கவுநான் கண்டேன் பராபரமே.

உள்ள துணரா வுணர்விலிமா பாவியென்றே
மெள்ளமெள்ளக் கைநெகிழ விட்டாய் பராபரமே.

எல்லா நினதுசெய லென்றெண்ணு மெண்ணமுநீ
யல்லா லெனக்குளதோ வையா பராபரமே. 335

பந்த மயக்கிருக்கப் பற்றேழிந்தே னென்றளறு
மிந்த மயக்க மெனக்கேன் பராபரமே. 336

காட்கியெல்லாங் கண்ணைவிடக்கண்ட துண்டோயா
னுக்கு, மாட்சி யுனதருளே யன்றே பராபரமே.

எட்டுத் திசையுமொன்று மின்பமாய் நின்றவுன்னை
விட்டுப் பிரியவிடம் வேறே பராபரமே. 338

பிறியா துயிர்க்குயிராய் பின்னமற வோங்குஞ்
செறிவே யறிவே சிவமே பராபரமே. 339

ஏதேது சொன்னு மெள்ளளவு நீயிரங்காச்
சூதே தெனக்குளவு சொல்லாய் பராபரமே. 440

கற்பனையாப் பாடுகின்றேன் கண்ணீருங் கம்
பலையுஞ்; சொர்ப்பனத்துங் காணேனென் சொல்
வேன் பராபரமே. 341

வன்பொன்று நீங்கா மனதிறப்ப மாருப்பே
ரன்பொன்றும் போதுமெனக் கையா பராபரமே.

ஏதுந் தெரியா வெளியேனை வாவெனநின்
போதநிலை காட்டிற் பொருதோ பராபரமே. 343

ஓராம லெல்லா மொழிந்தேற்குன் றெய்வவரு
ளாரா திருக்கத் தகுமோ பராபரமே. 344

மோனந் தருஞான மூட்டி யெனக்குவட்டா
வானந்த வாழ்க்கை யருளாய் பராபரமே. 345

வாடுமுகங் கண்டென்னை வாடாம லேகாத்த
நீடுங் கருணை நிறைவே பராபரமே. 346

புந்தியினு னின்னடியைப் போற்றுகின்ற மெய்யடி
யார், சிந்தையிறப் போநின் றியானம் பராபரமே.

உனக்குவமை யாக்கருணை யுள்ளவரும் வன்மைக்
கெனக்குவமை யானவரு மில்லை பராபரமே. 348

தாயிருந்தும் பிள்ளை தளர்ந்தாற்போ லெவ்விடத்து
நீயிருந்து நான்றளர்ந்து நின்றேன் பராபரமே. 349

வாயாற் கிணறுகெட்ட வாறேபோல் வாய்பேசிப்
பேயானர்க் கின்பமுண்டோ பேசாய் பராரோபம.

பாவமென்று லேதும் பயமின்றிச் செய்யவிந்தச்
சீவனுக்கார் போதந் தெரித்தார் பராபரமே. 351

இன்ப நிருவிகற்ப மின்றேதா வன்றெனிலோ
துன்பம் பொறுப்பரிது சொன்னேன் பராபரமே.

கற்குநிலை கற்றூர் கருவியவி ழாதருளாய்
நிற்குநிலை கற்பதுவே நீதம் பராபரமே. 353

காய்ச்சச்சுடர்விடும்பொற் கட்டிபோ னின்
மலமாய்ப், பேச்சற்றவரேபிறவார் பராபரமே. 354

பற்றொழிந்து சிந்தைப் பதைப் பொழிந்துதானேதா
னற்றிருப்ப தென்றைக் கமைப்பாய்பராபரமே.355

உருவெளிதான் வாதவூ ருத்தமர்க்கல் லாலினமுங்
குருவழிநின் றூர்க்குமுண்டோ கூறாய் பராபரமே.

தேகமியா தேனுமொரு சித்திபெறச் சீவன்முத்தி
யாகுநெறி நல்லநெறி யையா பராபரமே. 357

உலகநெறி போற்சடல மோயவுயிர் முத்தி
யிலமெனல் பந்த வியல்போ பராபரமே. 358

பரமாப் பரவெளியாப் பார்ப்பதல்லான் மற்றெவர்க்
குந், திரமேதுமில்லைநன்றாகத்தேர்ந்தேன் பராபரமே.

தேடுவே னின்னருளைத் தேடுமுன்னே யெய்தினட
மாடுவே னானந்த மாவேன் பராபரமே. 360

உள்ளங் குழைய வுடல்குழைய வுள்ளிருந்த
கள்ளங் குழையவென்று காண்பேன் பராபரமே.

பட்டப்பகல்போலப் பாழ்த்தசிந்தைமாளினெல்லாம்
வெட்ட வெளியாக விளங்கும் பராபரமே. 362

பார்க்கின னுப்போற்கிடந்த பாழ்ஞ்சிந்தை மாளி
னென்னை, யார்க்குச் சரியிடலா மையா பராபரமே.

பாட்டுக்கோ வன்பினுக்கோ பத்திக்கோவன்பர்தங்
கள், நீட்டுக்கெல் லாங்குறுகி நின்ருய் பராபரமே.

முத்தாந்த வித்தே முளைக்குநில மாயெழுந்த
சித்தாந்த மார்க்கச் சிறப்பே பராபரமே. 365

உன்னு வெளியா யுறங்காத பேருணர்வா
யென்னுளிக் குள்ளே யிருந்தாய் பராபரமே. 366

தத்துவமெல்லாமகன்ற தன்மையர்க்குச் சின்மயமா
நித்தமுத்த சுத்த நிறைவே பராபரமே. 367

உள்ளக் கொதிப்பகல வுள்ளுள்ளே யானந்த
வெள்ள மலர்க்கருணை வேண்டும் பராபரமே. 368

என்னைப் புரப்பதரு ளின்கடனா மென்கடனா
நின்னிற் பணியறவே நிற்கை பராபரமே. 369

தானேயா னன்னிலையைத் தந்தவரு ளானந்த
வானே மனாதீத வாழ்வே பராபரமே. 370

மண்ணாதி பூதமெல்லாம் வைத்திருந்த கின்னிறை
வைக், கண்ணாரக் கண்டு களித்தேன் பராபரமே.

அறியாமை யிதென் றறிவித்த வன்றேதான்
பிறியா வருணிலையும் பெற்றேன் பராபரமே. 372

தீதெனவு நன்றெனவுந் தேர்ந்துநான் றேர்ந்தபடி
யேது நடக்கவொட்டா தென்னே பராபரமே. 373

கண்டவறி வகண்டா காரமென மெய்யறிவிற்
கொண்டவர்க்கே முத்தி கொடுப்பாய் பராபரமே.

ஈறாக வல்வினைநா னென்னாம லின்பசுகம்
பேறாம் படிக்கடிமை பெற்றேன் பராபரமே. 375

பெற்றா ரனுபூதி பேசாத மோனநிலை
கற்றா ருனைப்பிரியார் கண்டாய் பராபரமே. 376

நீயேநா னென்று நினைப்பு மறப்புமறத்
தாயே யனையவரு டந்தாய் பராபரமே. 377

சஞ்சலமற் றெல்லாநீ தானென் றுணர்ந்தேனென்
னஞ்சலியுங் கொள்ளா யரசே பராபரமே. 378

பூதமுத னுதவரை பொய்யென்ற மெய்யரெல்லாங்
காதலித்த வின்பக் கடலே பராபரமே. 379

வாக்குமன மொன்றுபட்ட வார்த்தையல்லால்
வெவ்வேருய்ப், போக்குடைய வார்த்தை பொருந்
தேன் பராபரமே. 380

வன்மையின்றி யெல்லா மதித்துணர்வாய்க்
காகெடுவேன், றன்மையொன்றுந் தோயத் தடை
யோ பராபரமே. 381

பத்தர்சித்தர்வாழிபரி பக்குவர்கள் வாழிசெங்கோல்
வைத்தவர்கள் வாழிகுரு வாழி பராபரமே. 382

கல்லாதே னுனுலுங் கற்றுணர்ந்த மெய்யடியார்
சொல்லாலே நின்னைத் தொடர்ந்தேன் பராபரமே.

சொல்லிறப்பச் சற்குருவாய்த் தோன்றிச்சுகங்
கொடுத்த, நல்லுரைக்கே கொத்தடிமை நான்காண்
பராபரமே. 384

முத்திக்கு வித்தான மோனக் கரும்புவழி
தித்தித் திடவிளைந்த தேனே பராபரமே. 385

நித்திரையும் பாழ்த்த நினைவுமற்று நிற்பதுவோ
சுத்தவரு ணிலைநீ சொல்லாய் பராபரமே. 386

மண்ணு மறிகடலு மற்றுளவு மெல்லாமுன்
கண்ணி லிருக்கவுநான் கண்டேன் பராபரமே. 387

பூட்டிவைத்து வஞ்சப் பொறிவழியே யென்றனைநீ
யாட்டுகின்றதேதோ வறியேன் பராபரமே. 388

பொய்யுணர்வாயிந்தப் புழுக்கூட்டைக் காத்திருந்தே
னுய்யும் வகையு முளதோ பராபரமே. 389

## பைங்கிளிக்கண்ணி

அந்தமுட னாதி யளவாம லென்னறிவிற்
சுந்தரவான் சோதி துலங்குமோ பைங்கிளியே. 1

அகமேவு மண்ணலுக்கென் னல்லலெல்லாஞ் சொல்
லிச்,சுகமானநீபோய்ச்சுகங்கொடுவா பைங்கிளியே.

ஆவிக்கு ளாவியெனு மற்புதனார் சிற்சுகந்தான்
பாவிக்குங் கிட்டுமோ சொல்லாய்நீ பைங்கிளியே.3

ஆருமறி யாமலெனை யந்தரங்க மாகவந்து
சேரும் படியிலைறக்குச் செப்பிவா பைங்கிளியே. 4

ஆருன கண்ணீர்க்கென் னங்கபங்க மானதையுங்
கூறுத தென்னை குதலைமொழிப் பைங்கிளியே. 5

இன்பருள வாடையழுக் கேறுமெமக் கண்ணல்சுத்த
வம்பரமா மாடை யளிப்பானோ பைங்கிளியே. 6

உன்னுமலொன்றிரண்டென் றோராமல் வீட்டுநெறி
சொன்னார் வரவும்வகை சொல்லாய்நீ பைங்கிளியே.

ஊருமிலார் பேருமிலா ருற்றார்பெற் றாருடனே
யாருமிலா ரென்னை யறிவாரோ பைங்கிளியே. 8

ஊரைப் பாராமலெனக் குள்ளகத்து நாயகனார்
சீரைப்பார்த்தாற்கருணை செய்வாரோ பைங்கிளியே.

என்று விடியு மிறைவாவோ வென்றென்று
நின்றநிலை யெல்லா நிகழ்த்தாய்நீ பைங்கிளியே. 10

எந்த மடலூடு மெழுதா விறைவடிவைச்
சிந்தைமடலாவெழுதிச்சேர்ப்பேனோ பைங்கிளியே.

கண்ணுண்மணி போலின்பங் காட்டி யெனைப்பிரிந்த
திண்ணிய நமின்னம்வந்து சேர்வாரோபைங்கிளியே

ஏடார்மலர்சூடே னெம்பெருமான் பொன்னடியாம்
மாடா மலர்முடிக்கு வாய்க்குமோ பைங்கிளியே. 13

கல்லேன் மலரேன் கனிந்தவன்பே பூசையென்ற
நல்லோர்சொல்லாவெனைபு நாடுவரோ பைங்கிளியே

கண்டதனைக் கண்டு கலக்கந் தவிரெனவே
விண்டபெரு மானையுநான் மேவுவனோ பைங்கிளியே.

காணாத காட்சி கருத்துவந்து காணாமல்
வீணாள் கழித்து மெலிவேனோ பைங்கிளியே. 16

காந்த மிரும்பைக் கவர்ந்திழுத்தா லென்னவருள்
வேந்த னெமையிழுத்து மேவுவனோ பைங்கிளியே.

காதலால் வாடினதுங் கண்டனையே யெம்மிறைவர்
போதரவா யின்பம் புசிப்பேனோ பைங்கிளியே. 18

கிட்டிக்கொண் டன்பருண்மை கேளாப்பல வடிகொள், பட்டிக்கு மின்பமுண்டோ சொல்லாய்நீ பைங்கிளியே. 19

கிட்டாரோய் நெஞ்சிற் கிளர்வார் தழுவவென்று
னெட்டூர ராவரவர் நேசமென்னோ பைங்கிளியே. 20

கூறுங் குணமுமில்லாக் கொள்கையினா ரென்கவலை
யாறும் படிக்கு மணைவாரோ பைங்கிளியே. 21

சின்னஞ் சிறியேன்றன் சிந்தைகவர்ந் தாரிறைவர்
தன்னந் தனியே தவிப்பேனோ பைங்கிளியே. 22

சிந்தை மருளைத் தெளிவித் தெனையாள
வந்தகுரு நாதனருள் வாய்க்குமோ பைங்கிளியே.

சொல்லிறந்து நின்ற சுகரூபப் பெம்மானை
யல்லும் பகலு மணைவேனோ பைங்கிளியே. 24

தற்போதத் தாலே தலைகீழ தாகவைய
னற்போத வின்புவர நாட்செலுமோ பைங்கிளியே.

தன்னை யறியுந் தருணந் தனிற்றலைவ, ரென்னை
யணை யாதவண்ணமெங்கொளித்தார் பைங்கிளியே.

தாங்கரிய மையவெல்லாந் தந்தெனைவிட்டின்னரு
ளாம், பாங்கியைச்சேர்ந் தாரிறைக்குப் பண்போ
சொல் பைங்கிளியே. 27

தாவியதோர்மர்க்கடமாந் தம்மைவிட்டேயண்ண
விடத், தோவியம்போ னிற்கினெனை யுள்குவரோ
பைங்கிளியே. 28

தீராக் கருவழக்கைத் தீர்வையிட்டங் கென்னையினிப்
பாரேறு தாண்டானைப் பற்றுவனோ பைங்கிளியே.

தூங்கிவிழித்தென்னபலன் றூங்காமற்றூங்கிநிற்கும்
பாங்குகண்டா லன்றோ பலன்காண்பேன் பைங்
[கிளியே

தொல்லைக் கவலை தொலைத்துத் தொலையாத
வெல்லையிலா வின்பமய மெய்துவனோ பைங்கிளியே.

நன்னெஞ்சத் தன்பரெல்லா நாதரைச்சேர்ந்தின்ப
ணைந்தார், வன்னெஞ்சத் தாலேநான் வாழ்விழந்
தேன் பைங்கிளியே. 32

நானே கருதின்வர நாடார்சும் மாவிருந்தார்
ஞானே யணைவரவர் தன்மையென்னே பைங்கிளியே.

நீர்க்குமிழி போன்றவுட னிற்கையிலே சாசுவதஞ்
சேர்க்கவறி யாமற்றிகைப்பேனோபைங்கிளியே. 34

நெஞ்சகத்தில் வாழ்வார்நினைக்கின்வேறென்றணை
யார்,வஞ்சகத்தா ரல்லரவர் மார்க்கமென்னே பைங்
கிளியே. 35

பன்முத் திரைச்சமயம் பாழ்படக்கல் லாலடிவாழ்
சின்முத் திரையரசைச் சேர்வேனோ பைங்கிளியே.

பச்சைகண்ட நாட்டிற்பறக்குமுனைப்போற்பறந்தே
னிச்சையெல்லா மண்ணற் கியம்பிவா பைங்கிளியே

பாசபந்தஞ் செய்ததுன்பம் ப்ராரம வெம்மிறைவ
ராசைதந்த துன்பமதற் காற்றேனென் பைங்கிளியே.

பாராசை யற்றிறையைப் பற்றற்றநான்பற்றிநின்ற
பூராய மெல்லாம் புகன்றுவா பைங்கிளியே. 39

பேதைப்பருவத்தே பின்றொடர்ந்தென் பக்குவ
முஞ், சோதித்த வண்ணல்வந்து தோய்வாரோ
பைங்கிளியே. 40

பைம்பயிரை நாடுமுன்போற் பார்பூத்த பைங்
கொடிசேர், செம்பயிரை நாடித் திகைத்தேனுன்
பைங்கிளியே. 41

பொய்க்கூடு கொண்டு புலம்புவனே வெம்மிறைவர்
மெய்க்கூடு சென்று விளம்பிவா பைங்கிளியே. 42

பொய்ப்பணிவேண் டேனைப் பொருட்படுத்தி
யண்ணலென்பான், மெய்ப்பணியுந் தந்தொருகான்
மேவுவனோ பைங்கிளியே. 43

மண்ணுறங்கும் விண்ணுறங்கு மற்றுளவெலா
முறங்குங், கண்ணுறங்கேனெம்மிறைவர் காதலாற்
பைங்கிளியே 44

மட்டுப் படாத மயக்கமெல்லாந் தீரவென்னை,
வெட்டவெளி வீட்டிலண்ணன் மேவுவனோ பைங்
கிளியே. 45

மாலை வளர்த்தென்னை வளர்த்திறைவர் பன்னெறியாம், பாலைவனத்தில்விட்ட பாவமென்னே பைங்கிளியே. 46

மெய்வினையை மாற்றவுழ்த மெத்தவுண்டெம் மண்ணறந்த, மையனேய் தீரக்கமருந்துமுண்டோ பைங்கிளியே. 47

மேவுபஞ்ச வண்ணமுற்றாய் விண்சிறையா லல்லலுற்றாய், பாவிபஞ்ச வண்ணம் பகர்ந்துவா பைங்கிளியே. 48

வாய்திறவா வண்ணமென்னை வைத்தாண்டார்க்கென்றுயரை, நீதிறவாச் சொல்லி னிசமாங்காண் பைங்கிளியே. 49

வாட்டப் படாத மவுனவின்பங் கையாலே
காட்டிக்கொடுத்தானைக் காண்பேனோபைங்கிளியே.

வாரா வரவாக வந்தருளு மோனருக்கென்
பேராசை யெல்லாம்போய்ப்பேசிவா பைங்கிளியே.

விண்ணவர்தம் பாலமுதம் வேப்பங்காயாகவென்பாற், பண்ணியவெம் மண்ணன்மயல் பார்த்தாயோ பைங்கிளியே. 52

விண்ணுள் வளியடங்கி வேறற்ற தென்னவருட்
கண்ணு ளடங்கிடவுங் காண்பேனே பைங்கிளியே.

விண்ணோர் நிலவுதவழ் மேடையிலெல் லாருமுற,
மண்ணான வீட்டிலென்னை வைத்ததென்னே பைங்
கிளியே. 54

உள்ளத்தி னுள்ளே யொளித்திருந்தென் கள்ள
மெல்லாம், வள்ளலறிந் தாலெனக்குவாயுமுண்டோ
பைங்கிளியே. 55

ஆகத்தை நீக்குமுன்னே யாவித் துணைவரைநான்
றாகத்தின் வண்ணந் தழுவுவனே பைங்கிளியே. 56

தானே சுபாவந் தலைப்படநின் றன்ஞான
வானா னவரும் வருவாரோ பைங்கிளியே. 57

கள்ளத் தலைவரவர் கைகாட்டிப் பேசாம
லுள்ளத்தில் வந்த வுபாயமென்னே பைங்கிளியே.

## எந்நாட் கண்ணி

### தெய்வ வணக்கம்

நீர்பூத்த வேணி நிலவெரிப்ப மன்றாடுங்
கார்பூத்த கண்டனையான் காணுநா ளெந்நாளோ. 1

பொன்னுரு மன்றுண் மணிப் பூவைவிழிவண்டுசுற்று
மென்னு ரமுதினைய மிச்சிப்ப தெந்நாளோ. 2

நீக்கிமலக் கட்டறுத்து நேரே வெளியிலெம்மைத்
தூக்கிவைக்குந்தானைத் தொழுதிடுநாளெந்நாளோ.

கருமுகங்காட் டாமலென்றுங் கர்ப்பூரம் வீசுந்
திருமுகமே நோக்கித் திருக்கறுப்ப தெந்நாளோ. 4

வெஞ்செ லெனும்விழியார் வேட்கைநஞ்சுக் கஞ்
சினரை, யஞ்சே லெனும்கைக் கபயமென்ப தெந்
நாளோ. 5

ஆறு சமயத்து மதுவதுவாய் நின்றிலங்கும்
வீறுபரை திருத்தாண் மேவுநா ளெந்நாளோ. 6

பச்சைநிற மாய்ச்சிவந்த பாகங் கலந்துலகை
யிச்சையுட னீன்றாளை யாங்காண்ப தெந்நாளோ. 7

ஆதியந்தங்காட்டா தகண்டிதமாய் நின்றுணர்த்தும்
போதவடி வாமடியைப் போற்றுநா ளெந்நாளோ.

கங்கை நிலவுசடைக் காட்டானைத் தந்தை
யெனும், புங்கவெண்கோட் டானைபதம்புந்திவைப்ப
தெந்நாளோ. 9

அஞ்சுமுகங் காட்டாம லாறுமுகங் காட்டவந்த,
செஞ்சரணச் சேவடியைச் சிந்தைவைப்ப தெந்
நாளோ. 10

தந்தையிரு தாடுணித்துத் தம்பிரான் றுள்சேர்ந்த
வெந்தையிரு தாளிணைக்கே யின்புறுவ தெந்நாளோ.

## குருமரபின் வணக்கம்

துய்ய கரமலராற் சொல்லாமற் சொன்னவுண்மை
யையனைக்கல் லாலரசை யாமணைவ தெந்நாளோ. 1
சிந்தையினுக் கெட்டாத சிற்சுகத்தைக் காட்டவல்ல
நந்தியடிக் கீழ்க்குடியாய் நாமணைவ தெந்நாளோ. 2
எந்தை சனற்குமர னுதியெமை யாட்கொள்வான்
வந்த தவத்தினரை வாழ்த்துநா ளெந்நாளோ. 3
பொய்கண்டார் காணுப் புனிதமெனு மத்துவித
மெய்கண்ட நாதனருண் மேவுநா ளெந்நாளோ. 4
பாதிவிருத் தத்தாலிப் பார்விருத்த மாகவுண்
மை,சாதித்தார் பொன்னடியைத் தான்பணிவ தெந்
நாளோ. 5
சிற்றம் பலமன்னுஞ் சின்மயராந் தில்லைநகர்க்
கொற்றங் குடிமுதலைக் கூறுநா ளெந்நாளோ. 6
குறைவிலருண் ஞானமுதல்கொற்றங் குடியடிக,
ணறைமலர்த்தாட் கன்புபெற்று நாமிருப்பதெந்
நாளோ. 7

நாளவங்கள்போகாம னன்னெறியைக் காட்டி யெமை, யாளவந்த கோலங்கட் கன்புவைப்ப தெந் நாளோ. 8

என்னறிவை யுள்ளடக்கி யென்போல் வருமவுனி தன்னறிவுக் குள்ளேநான் சாருநா ளெந்நாளோ. 9

ஆறுளொன்றை நாடினதற் காறுமுண்டா மென்றமக்குக்,கூறுமவுனியருங்கூடுநாளெந்நாளோ

இல்லாம னின்றருணே நேராபா ரென்றவொரு சொல்லான் மவுனியரு டோற்றுநாளெந்நாளோ.11

வைதிகமாஞ் சைவ மவுனிமவு னத்தளித்த மெய்திகழ்ந்தென் னல்லல் விடியுநா ளெந்நாளோ.12

வாக்கு மனமற்ற மவுனிமவு னத்தருளே தாக்கவுமென்னல்லலெல்லாந்தட்டழிவதெந்நாளோ.

## அடியார் வணக்கம்

வெம்பந்தத் தீர்த்துலகாள் வேந்தன் றிருஞான சம்பந் தனையருளாற் சாருநா ளெந்நாளோ. 1

ஏரின் சிவபோக மிங்கிவர்க்கே யென்னவுழ, வாரங்கொள் செங்கையர்தாள் வாரம்வைப்ப தெந் நாளோ. 2

